எனகிற ஸூத்ரமும் अन्यपरं.

1 'वाङ्मनसि दर्शनाच्छब्दाच्च'

( வாஙகமநஸி தர்ஶநாச்சபதாசச )

इत्यादिகளாலே सर्वेन्द्रिय संयुक्त सूक्ष्मशरीरதேதாடே जीवனுககு गमनागमन प्रकारं निर्णीतமாயிற்று.

2 'तेषां त्ववयवान् सूक्ष्मान् षण्णामप्यमितौजसां ।
सन्निवेश्यात्ममात्रासु सर्वे भूतानि निर्ममे ॥'

( தேஷாம் தவவயவாந ஸூக்ஷமாந ஷணணுமபயமிதௌஜஸாம।
ஸந்நிவேஶ்யாதமமாதராஸு ஸாவ பூதாநி நிாமமே ॥ )

என்கிற मनुवचनமும்

3 'मनष्षष्ठानीन्द्रियाणि प्रकृतिस्थानि कर्षति'

( மநஷஷஷடானீநதரியாணி பரகருதிஸததாநி காஷதி )

எனகிற भगवद्गीतावचनமும प्रधानஙகளையிட்டு अप्रधानஙகளை उपलक्षिககிறது. இஙஙன கொளளாதபோது

4 'अत एव सर्वाण्यनु'

( அத ஏவ ஸாவாண்யநு )

---

1. மரிககுமபோது வாககு மனஸஸில அடஙகுகினறது காணபபடுகிறபடியினுலும் ச்ருதியில சொலலியிருக்கிறபடியினுலும
சாரீ-ஸூ 4-2-1

2. மனு 1-16

3. 35-ம பக்கம பாாக்க.

4. சாரீ-ஸூ 4-2-2

எனகிற सूत्रமும் இதின विषय वाक्यமும विरोधिக்கும்

अधिष्ठान विशिष्ट सृष्टियாலும் आप्यायन विशेषததாலும் कर्मेन्द्रियஙகளுககு प्रतिशरीरं सृष्टियாகிறதெனனில, இது ज्ञानेन्द्रियादिகளிலும சொலலலாம இபபடி மற்றுமுளள विरुद्धार्थஙகளுககெல்லாம் परिहारம கணடுகொளவது.

இமமததுககு மூலமாக

1 ‘ईश्वराव्याकृत प्राण विराट् भूतेन्द्रियोर्मिभिः।
यत्प्रनृत्यदिवाभाति तस्मै सद्ब्रह्मणे नमः॥’

(ஈஶ்வராவயாகருத பிராணவிராட பூதேநதரியோர்மிபி:।
யத பரநருதயதிவாபாதி தஸ்மைஸத் பரஹமணே நம:॥)

எனறு தொடஙகி कात्यायन காரிகையெனறும் पठिக்குமதுவும் आर्षமெனறு विश्वसनीयமாமபோது प्रमाणाविरुद्ध तात्पर्यம கொளளுதல,

2 ‘उत्क्रमिष्यत एवं भावादित्यौडुलोमिः’

(உதகரமிஷயத ஏவம் பாவாதிதயெளடுலோமி·)

इत्यादि सूत्रஙகளாலே மற்றுமசில ऋषिमतஙகளை எடுததுக கழிததாபபோலே கழிபபுதல செயயலாம. ऋषिमतஙகள படுகிறபடி கண்டால ब्रह्मदत्तादिகள சொனன भेदाभेद पक्षததுககும कैमुतिक न्यायததாலே निरासமுணடாம

---

1. ஈச்வரன, மூலபரகருதி, பராணன, விராட், பூதங்கள, இந்தரியஙகள இவறறுல எது குததாகுவதுபோல தோனறுகிறதோ அநத ப்ரஹமததுககு நமஸகாரம.

2 (ஜீவனைச் சொலலும சபதததால பரஹமத்தைச் சொல்வது) சரீரததை விட்டுக்கிளமபிப போகிறவன இவவிதமாகிருககையால, எனறு ஔடுலோமி (சொலலியிருககிருா) சாரீ-ஸூ 1-4-21

श्रुति स्मृत्यादि्களில एकविषयஙகளான एकानेक भेदाभेद शब्दங களை विशिष्टाकार भेदஙகளாலே उपपन्नஙகளாம. भास्कर मतததில सदादि शब्द वाच्यமுமாய सर्वात्मकமான एक द्रव्यं ब्रह्म. இதில ईश्वरांशं सर्वदा सर्वज्ञமாய सर्वशक्तியாயிருககும उपाधिயெனறொரு अंशம प्रकृत्यादि विभागवததாய नित्याचेतनமாயிருககும இவவுपाधि परिणाम विशेषஙகளாலே अनादिயாக अविच्छिन्नமான ईश्वरांशं जीवா கள எனறுபேராய उपनिषததுககளில சொலலுகிற ऐक्य योग बलத தாலே उपाधिसंसर्गம் निःशेषமாகக கழிநதால

1 'घटध्वंसे घटाकाशो न भिन्नो नभसो यथा'

(கடதவமஸே கடாகாஶோ ந பிநநோ நபஸோ யதா)

எனனுமபடி ईश्वरனில காடடில औपाधिकभेदं கழிநதும ईश्वरனோடு வேறுபடட अहन्तैயும सबोधமுமிலலாத अविभक्तेश्वर तत्वமாய நிறகு மெனற उपन्यासं नित्यः सर्वज्ञ एकश्चेत्यादिகளுககு अनुगुणंபோலே தோறறி தேன பூசசி வரளிபோலே आपातरमणीयமாய் निपुण निरूपणदशैயில अत्यन्तानुपपन्नமாயிருக்கும

இபபக्षததில सद्द्रव्यमात्रं ब्रह्मமெனறதுககும இததை चिदचिद्भागवत्எனறதுககும் இபभागஙகள இரணடுககும उपाध्यंशங களுககும परस्पर भेदाभेदஙகள स्वाभाविकஙகளெனறும மறறுமிப्र कारஙகளில சொலலு மவைததுக கெலலாம श्रुति स्मृत्यादि सर्व प्रमाण विरोधமும் जैनादि मतஙகளில சொனன उपपत्ति विरोधமும दुष्परिहरम्। जीवனுககும் ईश्वरனுககும ऐक्यं स्वाभाविकं, भेदं औपाधिक மென்ற विभागததில प्रत्यक्षानुमानஙகள प्रवर्त्तியாது ஒனறு स्वाभाविकं ஒனறு औपाधिकं எனறு வகுததுச சொலலுவதொரு शास्त्रமிலலை. ऐक्य भेद व्यपदेशஙகளும शक्ति शरीरादि शब्दஙகளும सामानाधिकरण्य

1 கடம நாசமடைந்தால கடாகாசம் ஆகாசததைக காடடிலும பிந்நமாகாததுபோல

மும் चिदचित्துககளிரணடிலும துல்யமாயிருகக இவைத்தில கொணடு இவனுககு अचेतनததில காடடில வேறுபட்ட चेतनाशததில औपाधिक भेदं கடடவொணணுது. मुक्त दशैயிலே विशेपिததுऐक्यं சொலலுகையாலே अभेदं स्वाभाविकமாக வேணடாவோ? எனனில, இதுவும साम्य श्रुत्यादि विरोधததாலே,

1 'मम साधर्म्यमागता:'

(மம ஸாதாமய மாகதா:)

2 'भोगमात्र साम्य लिगाच्च'

(போகமாதர ஸாமய லிஙகாசச)

इत्यादि स्मृति सूत्र विरोधததாலும

3 'राम सुग्रीवयोरैक्यं देव्येवं समजायत'

(ராம ஸு'கரீவயோரைககயம தேவயேவம ஸமஜாயத)

इत्यादिகளில போலே अन्यपरமாம. मुक्तனுககு விசேஷிததது ब्रह्म शब्द सामानाधिकरण्यமும் श्रुत्यन्तरोक्त परमसाम्य विवक्षैயாலே घटिககும் ब्रह्मமேயாமெனகிற अवधारणமும स्पर्धमानனை पुरुषन वामन पश्चालंभததாலே विष्णुவேயாயிநத लोकஙகளையெலலாம் ஜயிககு மெனனுமிடததில போலே परसाम्य विवक्षैககு अत्यन्तानुगुणமாம.

---

1 எனககு ஸமானமான ஸவபாவததை உடையவாகளாயிருககையை அடைநதிருககிற, கீதை

2 அனுபவம மாததிரம ஸமமாயிருககும எனபதில ஸமருதி முதலியவைகள இருககிறபடியினுலும. சாரீ-ஸூ 4-4

3 ஓ தேவி ராமனுககும ஸுக்ரீவனுககும இவ்வாறு ஐக்யம உணடாயிறறு (ராமா ஸுந)

नदिகள் समुद्रத்திலே अस्तத்தை யடையுமாப் போலே विद्वान् नाम रूप विमुक्தனாய்க் கொண்டு परम पुरुषனை யடையுமென்கிறவाक्यத்திலும் कर्मकृत नामरूप निवृत्त्यादिகளாலே வருகிற विवक्षितं साम्यमे पूर्वजलத்துக்கும் प्रविष्टजलத்துக்கும் स्वरूपैक्यமில்லை யென்னுமிடம் घट करक सलिलसंभेदத்தில் आधिक्य दर्शनத்தாலே யறியலாம் இது शुद्धोदकத்திலே आसिक्तமான उदकान्तरं तादृक्ஆமாப்போலே யென்கிற श्रुत्यन्तरத்தாலே व्याख्यातं घटध्वंसத்தில் घटाकाशं नभस्सोடே अभिन्नமாப்போலே என்கிற श्रीविष्णु धर्मवचनமும் घटाकाश महाकाश भागங்களுக்கு புதிதாகவொரு स्वरूपैक्यापत्तिயை उदाहरिக்கிறதென்று घट संयोग लक्षण वैषम्य निवृत्ति मात्रोदाहरणத்திலே (தாத்பாயம்) तत्परम्।

1 ‘ तद्भाव भाव मापन्न ’

( தாத்பாவபாவ மாபந்ந )

2 ‘ विभेद जनके ज्ञाने ’

( விபேத ஜநகே ஜ்ஞாநே )

इत्यादि श्रीविष्णु पुराण वचनங்களும் स्वरूपभेदंநிற்க औपाधिक वैधर्म्यरूप भेदनिवृत्ति परங்களென்னுமிடம் पूर्वापरादि परामर्शத்தாலே யறியலாம்.

3 ‘ आमुक्तेर्भेदः ’

( ஆமுக்தோபேத )

என்னும் भगवच्छास्त्र वचनங்களுக்கும்

---

1. அதன் தன்மை வரப்பெற்றவன்.
2. பேதத்தை உண்டாக்கும் ஜ்ஞானம்.
3. முக்தி அடையும் வரையில் பேதம்.

1 'யானுந்தானாயொழிந்தானை'

इत्यादि द्रमिडोपनिषद्वाक्यங்களுக்குத் தமிப்படி सर्वानु गुणமான तात्पर्यம் கண்டுகொள்வது. उपाध्यवच्छिन्नचिदंशं जीवனென்கிற இவன் उपाधिயாலே घटाद्काञ्जलिन्यायத்தாலே छेदம் சொல்லுமாகில் छेदनाद्यनर्हत्व वचन विरोधंவரும் घटाकाशादि न्यायத்தாலே प्राप्तस्वरूपத்தில் उपाधि संयुक्त प्रदेश भेदங்களை जीवர்களென்னில் उपाधि संचार दशैயிலே पूर्वापर प्रदेशभेदத்தாலே पूर्वानुभूत प्रतिसंधानादिகளில்லையாம் प्रतिक्षणं बन्ध मोक्षங்களும் प्रसंगिக்கும்

उपाधिभुक्त प्रदेशं தன்னிலே उपाध्यन्तरागमத்தாலே மீண்டும் बंधமுண்டாம். व्यवस्थितैकैक प्रदेशवर्तिகளாக சில उपाधिகளைக் கட்டவொண்ணாது जीवविभुत्वादिகள் சொல்லும் प्रकारத்தாலே उपाधिसंयुक्त ब्रह्म தனக்கே ஜீவத்வமென்னில் जीवाणुत्वाभ्युपगम विरोधமுண்டாம். सर्वोपाधिகளால் வரும் सुखदुःखங்களெல்லாம் ब्रह्म தனக்கே யாகையாலே प्रदेश नियम प्रयुक्त भोग व्यवस्थैயும் ईश्वरனுடைய निर्दुःखत्वाभ्युपगमமும் निर्मूलமாம். उपाधि स्वरूपந்தானும் ब्रह्मமாகையாலே उपाध्यवच्छिन्न ब्रह्मமென்று उपाधि தன்னை विवक्षिக்கிறோமென்னில் चिदचिद्विभाग सिद्धान्तத்தை விட்டு चार्वाक पक्षத்தை परिग्रहिக்கும்படியாம் ஆகையால் उपाधि विशिष्ट चेतनान्तरங்களை जीवர்களாக இசைந்து उपाधिनिवृत्तियில் जीवனுக்கு ईश्वरனோடு जगद्व्यापारादि व्यतिरिक्त परम साम्यங்கொள்ளுமதே श्रुतिस्मृति सूत्रानुगणम्॥

जीवेश्वरர்களுக்கு स्वाभाविकமாக भेदाभेदங்களிரண்டையும் கொள்ளுவார்க்கும் औपाधिक भेदங்கொள்ளுவார்க்கும் பொதுவான दोषஞ்சொல்லுகிறோம்:—

ब्रह्मांशமாய स्वतःसर्वज्ञனான ईश्वरன் அது தன்னோடொக்க ब्रह्मांशமாயாதல் அது தான் उपाध्यवच्छिन्न प्रदेश विशेषமாயாதல் நிற்கிற जीवர்களுக்கும் தனக்கும் स्वरूपैक्यத்தையறியானாகில்

1. திருவாய்மொழி 8-8-4

सर्वज्ञனுக மாட்டான அறியுமாகில सर्व जीवदुःखத்தையும स्वदुःख மென்று प्रतिसन्धानं பண்ணி नरकादिभोक्तावாய जीवानन्त्यத்தாலும अनादि संसारानुवृत्तिயாலும अनन्त नित्य दुःखவானுக प्रसंगिக்கும.

जीवர்கள் தங்களுக்கும स्वरूपैक्यं स्वभाविकமென்கிற இவ னுக்கு सौभरिकार्तवीर्यादि न्यायத்தாலே उपाधिभेद भोग व्यवस्थापक மாகமாட்டாமையாலே सर्वानुभूत सर्व सुखदुःखादि प्रतिसन्धानंவரும

1 'शास्त्र फलं प्रयोक्तरि'

'ஶாஸ்த்ர பலம் ப்ரயோக்தரி'

என்கிற व्यवस्थैயுங்குலைந்து कर्तृविशेष नियत विधिनिषेधशास्त्र व्याकुलतै யும் உண்டாம் ईश्वरांशத்திலுள்ள आनन्दादिகளும் எல்லாம் ऐक्याकारத்தாலே सर्व जीवர்களுக்கும் प्रतिसन्धेयங்களாம். सर्वத் தோடும் स्वरूपैक्यமுடைய सद्व्य स्वरूप ब्रह्मविषयத்தில निरंशत्व, निर्विकारत्व निर्दोषत्व श्रुतिகளும் अन्वयாதபடியாம.

இப்படியால இபभेदाभेदपक्षं ब्रह्मज्ञान पक्षத்திலும் காட்டிலும் पापीया னென்று वेदार्थसंग्रहத்திலேயருளிச் செய்தார்

ஒன்றெனவும் பலவெனவும் தோற்றுகின்ற
உலகெல்லாமொரு பிரமந்தானேயாக்கி *
நன்றெனவும் தீதெனவும் பிரிந்ததெல்லாம்
நன்றென்று தீதன்றேயென நவின்றோர் *
கன்றுமலா பசுவுமலராகி நின்ற,
கன்றுகிப பசுவாகி நின்றவண்ணம, *
இன்று மறை மாட்டுக்கோ ரிடையனென,
ஏகாந்தி யறிந்திட நாமியம்பினோமே. 27

---

1 சாஸ்த்ரம் போதிக்கும் பலம் அதன் உபாயமான கர்மாவைச் செய்கிறவனுக்கு உண்டாகும்.

इति श्रीकवितार्किकसिंहस्य सर्वतन्त्र स्वतन्त्रस्य

श्रीमद्वेङ्कटनाथस्य श्रीमद्वेदान्ताचार्यस्य कृतिषु

## श्री परमतभङ्गे

### ॥ भास्कर भङ्गाधिकारः त्रयोदशः ॥

(பதிமூனறாவது பாஸ்கர பஙகாதிகாரம)



---

[ப-ரை] ஒனறெனவும - ஒனறாகவும, பலவெனவும - பலவகைப பட்டவைகளாகவும, தோறறுகினற-காணபபடுகினற, உலகெலலாம-லோகததிலுளள வஸதுககளெலலாம, ஒருபிரமநதானேயாககி - ஒரு பரமமமாகவே இருககிறதாகக கொணடு, நனறெனவும - நலலதுக ளெனறும, தீதெனவும - கெடடதுகளெனறும், பிரிநதெலலாம் - பிரிககப்படட வஸதுககளையெலலாம, நனறனறு - நலலவையலல, தீதனறே - கெடடவைகளலல, என நவினறார - இபபடி சொலகிற வாகள, கனறும அலா-கனறுமலல பசுவுமஅலா-பசுவுமலல, ஆகி நினறே-இபபடி சொலலும்படியாக இருநதே, கன்றாகி-கனறுக குடடி களாகவும பசுவாகி-பசுககளாகவும, நினற வணணம - நிற்கும ப்ர காரததை, இனறு-இனறைககு, மறை - வேதமாகிற, மாட்டுககு-பசு வுககு, ஒர்-ஒபபறற, இடையனென-கோபாலனென, ஏகாநதி-ஒரே நிலையில உளளபகவான, அறிநதிட-அஙகீகரிககுமபடி (ஒபபுக கொளளுமபடி) நாம, இயமபினேமே-சொனனேம-அதாவது பகவான ஸ்ரீபகவத கீதையில சொனன அாத்தஙகளுடன சேருமபடி பரமதஸ தாகளை தூஷிததோம எனறபடி) 27

॥ श्रीः ॥

॥ श्रीमते निगमान्त महादेशिकाय नमः ॥

சீரார் தூப்புல திருவேங்கட முடையான திருவடிகளே சரணம்

॥ वैयाकरण भङ्गाधिकारः चतुर्दशः ॥

பதினானகாவது வையாகரண பங்காதிகாரம )

[ வையாகரண மத நிரஸன பிரதிஜ்ஞை அவாகள் கொளகை களின ஸங்கரஹமும அவறறின் நிரஸனமும]

சாயாமறைகளில சததந் தெளிநதிடச சாறறுதலால *
தூயாரிவரெனறு தோனற நினறே பலசூதுகளால *
மாயாமதமும மறு சினவாதும பவுததமும சோ
வையாகரணா சொலலும மறுமாறறஙகள மாறறுவமே 28

[ வையாகரண மத நிரஸன பிரதிஜ்ஞை ]

बौद्ध जैन निराकरण க்ரமததிலே ब्रह्म विवर्त परिणाम वादஙகளை நிராகரிததோம. वेद वाद कञ्चुकच्छन्नராய்க கொணடு विपरीतஞ சொன்ன இவாகளைப போலே वेदाङ्ग निर्वहण व्याज संवृतராயக

---

[ப-ரை] சாயா - ஸ்வர, அக்ஷர, மாத்திரை இவைகளுடன உச்சரிக்க வேணடிய, மறைகளில - வேதஙகளிலே, சததம - சபதஙகள, தெளிநதிட - தெளியுமபடி, சாறறுதலால - நிரூபிக்கிற படியால, இவா - இவாகள (வையாகரணாகள) தூயாா - தோஷமிலலாதவாகள எனறு தோன்ற நினறே - எனறும தோன்றுமபடி நினறு கொணடே, பல - அனேகஙகளான, சூதுகளால - கபடஙகளாலே, மாயா மதமும- மாயாவாதி பக்ஷததையும, மறு - மற்றெனறுன, சினவாதும - ஜைனாகளுடைய வாதஙகளும், பவுததமும - புததமதததையும, சோ-சேர்ததுககொளளுமவரான, வையாகரணா, சொலலும-சொலலுகிற, மறுமாறறுஙகள - வேறுவிதமான ஆததஙகளை, மாறறுவம - ஒழிதது விடுவோம, 28

கொண்டு सर्वமும் शब्द ब्रह्मத்தினுடைய विवर्तமாதல परिणामமாத லென்று சொல்லுமவர்களை निरसिககிறோம. (நிராகரிககிறோம)

[ அவாகள கொளகைகளின ஸங்க்ரஹம் ]

இவாகள प्रत्यक्षसिद्ध वर्णஙகளையும वर्णसंघात विशेष रूप पदங களையும पदसंघात विशेषात्मकஙகளான वाक्यஙகளையுமொழிய अर्थ विशेष बोधकமாக स्फोटமென்று ஒனறைக கட்டுமது साध्वसाधु विवेकार्थशब्द प्रक्रियादिகளுககு उपकारकமனறு. शब्दததாலே अर्थததை அறியா நினறோமெனகிற விடததிலே तत्त्व प्रत्यक्षं अन्यथासिद्धं निपुण निरूपणं பணணின वैयाकरणா செவியாலே கேட்டுப பாரத தாலும वर्णातिरिक्तமாகவொரு वाचकं தோறறுகிறதிலலை वर्णங களுககு अर्थबोधकत्वததிலே சில अनुपपत्तिகளைச் சொலலி வேறொனறை बोधकமாகக கட்டுகிறவனதானே இவவாண விசேஷஙகள தன்னை அநத स्फोटததுககு विशेष व्यंजकஙகளாகக கொளளுகையாலே இவைததுககு अर्थबोधनததில சொனன अनुपपत्तिகளெலலாம் स्फोट व्यंजक(ந)த்திலே வரும். वर्ण संश्रयமாக स्फोटமெனறொனறை व्यासादि महर्षिகள சொனனதுவும் वर्णங களுடைய स्वार्थस्फुटीकरण शक्ति मात्रமாக அமையும.

இபபடி पराभिमत स्फोटरूप शब्दததில प्रमाणமில்லாமையாலே

1 'शब्द ब्रह्म यदेकं यच्चैतन्यं च सर्व भूतानां
यत्परिणामं त्रिभुवन मखिलमिदं'

( ஶபத பரமம யதேகம யசசைதநயம ச ஸாவ பூதாநாம
யதபரிணமம தரிபுவந மகிலமிதம் )

என்று हलायुधन சொன்னதுவும் निर्मूलं. शब्दந்தானே चैतन्यமென்ற துவும त्रिभुवनं शब्द परिणामமென்றதுவும स्वसंप्रतिपन्न श्रुत्यादि विरुद्धं स्वाभिमत देवता स्तुति मात्रार्थமாக சில कल्पनैகளைப பண்ணுமதில

1 'देवतां कांचिदुद्दिश्य भक्त्या यो वक्ति किंचन।

तस्य दोषं न यत्किंचित् मनसापि विचिन्तयेत्॥'

(தேவதாம காஞ்சிதுத்திசய பகதயா யோ வகதி கிஞசந ।

தஸய தோஷம ந யதகிஞசித மநஸாபி விசிநதயேத ॥)

என்று आलंकारिकா சொன்னபடியே उपेक्षिககிறோம்.

இபபடி शब्द तत्व विवर्तமான

2 'परमज्योतिरुचो गोपते:'

(பரமஜயோதிருசோ கோபதே:'

என்கிற सांब वचनததாலும் शब्दार्थ मिथ्यात्व स्थापनं பண்ண வொண்ணாது. सर्व प्रपंचமும் शब्दविवर्तமென்கிற पक्षமும भर्तृहरि ग्रन्थादिகளில சொலலுமுசம் युक्त्याभास तूलजालமும் எலலாம प्रच्छन्न बौद्धादि दूषण न्यायததாலே निरस्तम्.

ஒரு शब्दத்திலே மற்றுள்ள शब्द प्रपंचமெல்லாம பிறககிற தென்று वेद वैदिक वाक्य सिद्धமானால इप्रक्रियैயாலே अर्थप्रपंचமெல லாம் शब्दத்திலே பிறக்கிறதாக அமையாதோ என்னில? இது

1. பக்தியினாலே ஒருவன ஒரு தேவதையைக் குறிதது ஒன்று சொன்னால அதில் குற்றத்தை மனஸஸினாலும கருதககூடாது.

2.

संभावनामात्र वचनமாகையால प्रमाणமாகாது. இதனை अनुमानமாக வகுக்கும்போது प्रमाण विरोधं வரும் वर्णங்களில वर्णान्तरोत्पत्ति சொன்ன விடமும் नित्यங்களான மந்தரங்களுக்கு बीज क्लृप्ति பண்ணினதுவும்

1 'स्युः शक्ति शालिनो मन्त्राः एवं सृष्टि विचिन्तनात्'

(ஸ்யு:ஶக்தி ஶாலிநோ மந்த்ரா: ஏவம் ஸ்ருஷ்டி விசிந்தநாத)

எனகிறபடியே भावनादि विशेष विधिपरं

2 'न सोऽस्ति प्रत्ययो लोके यः शब्दानुगमादृते ।

अनुविद्धमिव ज्ञानं सर्वं शब्देन गृह्यते ॥'

(ந ஸோऽஸ்தி ப்ரத்யயோ லோகே ய: ஶப்தாநுகமாத்ருதே।

அனுவித்தமிவ ஜ்ஞானம் ஸர்வம் சப்தேந க்ருஹ்யதே ॥)

என்றதுவும் पशु मृग बाल मूकादि ज्ञानங்களில शब्दानुमानं கூடாமையாலும் அங்குமிதைக் கலப்பிக்கைக்கொரு प्रमाणமில்லாமையாலும் निरस्तम्. अव्युत्पन्नावस्थैயிலும் वाचक शब्दத்துக்கு बोधकत्वं स्वभाव सिद्धமென்னுமது अनुपलंभத்தாலும் व्युत्पत्ति नैरपेक्ष्य प्रसंगத்தாலும் अनुपपन्नं

शब्दத்தினுடைய सूक्ष्मतैயாலே अनुपलंभமென்னில் அப்படி अनुपलंभ शब्दத்துக்கு बोधकत्वமில்லையாம்

---

1. இப்படி ஸ்ருஷ்டியை (உத்பத்தியை) தயானித்தால் மந்தரங்கள் சக்தியுள்ளவைகளாயிருக்கும்.

2. சப்தத்தின் சேர்க்கையிராமல் ஒரு அறிவும் உலகத்தில் இல்லை எல்லா ஜ்ஞானமும் சப்தத்தோடு ஒட்டினதாகவே தோன்றுகிறது.

1 'सूक्ष्मैः पश्यन्तिवैखरि'

( ஸூக்ஷ்மை: பஶ்யந்திவைகரி )

யெனறு शब्दததிலே சில अवस्थाविशेषஙகள आप्त वाक्य सिद्धஙகளா ஞலும सूक्ष्माद्यवस्थैகளில वाचकत्वं घटियாது. இவவிभागोपदेशமும अन्यार्थम् இவவர्थஙகளைபபறற சில अनुमानஙகளைக கடடிஞ லும் அவை उपलंभोपपत्ति विरुद्धஙகளாம वेदान्त प्रस्थान विरुद्धஙக ளாம. वेदान्त प्रस्थान विरुद्धமாக शब्द स्वरूप नित्यत्वादिகள சொன னது वाचकत्वததுககாதல वेद नित्यत्वादिகளுக்காதல अनपेक्षित மாகையாலே वैभव वादமாமததை जैमिनि शब्दाधि करणமும अन्यपरं.

மற்றும बौद्धா சொலலும் शब्दाध्यासादिகளுககும बौद्धगन्धि वैयाकरणादिகள சொலலும प्रतिभा वाक्य वाक्यार्थादि वादஙகளுககும प्रकारஙகளாலே उचितोत्तरஙகணடுகொளவது.

இபபடிகளால सर्व कारणமாக शब्द ब्रह्मமெனறெனறைக கடடினவாகள वाक्यமும अनादरणीयम् शब्दार्थஙகளிரணடுககும स्रष्टावான परम पुरुषனே परब्रह्मं अर्थान्तरஙகளில ब्रह्मशब्दं औपचा रिकं. सूक्ष्मचिदचिद्विशिष्टஞன औपनिषद परम पुरुषன தானே स्थूल चिद चिद्विशिष्टஞயக கொணடு परिणमिககிறனெனறு शारीरक निर्णीत மான परमार्थததை प्रतिक्षेपिககுமது पाणिनि कात्यायन पतञ्जलि प्रभृति परमर्षिपरिषததுககு अभिप्रेतமாகாது.

இபபோது எஙகும நடையாடாத ऐन्द्र चान्द्र माहेश दौर्ग कौमार कापिशलादि व्याकरणஙகளில சில विरुद्धार्थஙகளுணடெனறு சொல்லுகைககு प्रमाणமிலலை. உணடாஞலும்

---

1 ஸூக்ஷ்மை பசயநதி வைகரி, எனற இவை சபதததின அவஸதா விசேஷஙகள.

1 'अष्टादश पुराणानि अष्टौ व्याकरणानि च।
ज्ञात्वा सत्यवतीसूनुश्चक्रे भारत संहितां॥'

(அஷ்டாதஶ புராணானி அஷ்டௌ வ்யாகரணானி ச।
ஜ்ஞாத்வா ஸத்யவதீஸூநு:சக்ரே பாரத ஸம்ஹிதாம்॥)

என்று சொல்லச்செய்தே संकीर्ण राजस तामस पुराणங்களில் विरुद्धाविरुद्धांशं பண்ணும் க்ரமத்திலே निर्वहिங்கண்டுகொள்வது.

கலக்கத்தில் கலங்கிவரும் காணிக்கெல்லாம்
கண்ணுறு சதிரவழி கட்டுவார்போல், *
உலகத்தில் மறை சேர்ந்த வுரைகள் தம்மால்,
ஒருபிழையும் சேராமல் உபகரித்தார். *
பலகத்தும் பவுத்தர் முதலான பண்டைப,
பகற் கள்ளர் பகட்டழிக்கப் பரவும் பொய்யாம் *
சிலகற்றுச்சித்தாந்தமறிய கில்லாச,
சிறுவரினி மயங்காமற் சேமித்தோமே. 29

इति श्रीकवितार्किकसिंहस्य सर्वतन्त्र स्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य श्रीमद्वेदान्ताचार्यस्य कृतिषु

## श्री परमतभङ्गे

॥ वैयाकरण भङ्गाधिकारः चतुर्दशः ॥

(பதினான்காவது வையாகரண பங்காதிகாரம்)



---

1. பதினெட்டு புராணங்களையும் எட்டு வ்யாகரணங்களையும் அறிந்து ஸத்யவதீபுத்ரரான வ்யாஸர் மஹாபாரதத்தைச் செய்தார்.

|| श्रीः ||

|| श्रीमते निगमान्त महादेशिकाय नमः ||

ஸ்ரீமாந் வேங்கட நாதார்ய: கவிதார்கிக கேஸரீ ப்ரவேகடமுடையான் திருவடிகளே சரணம்

## || वैशेषिक भङ्गाधिकारः पञ्चदशः ||

( பதினைந்தாவது வைசேஷிக பங்காதிகாரம் )

[ வைசேஷிகர்களின் கொள்கைகளும் அவற்றின் நிரஸனமும் ]

கண்டதலாதன கட்டுதலால் கண்டுவிட்டதனால் *
பண்டுளதான மறைக்குப் பழமையை மாற்றுதலால் *
கொண்டது மீசனைக்கொள்ளா வகையென்று கூறுதலால் *
கண்டகராய் நின்ற காணாதர் வாதங்கழற்றுவமே * 30

---

[ப-ரை] கலகத்தில் - விவாதத்தாலே, கலங்கி - கலக்கப்பட்டு, வரும், காணிக்கெல்லாம் - க்ஷேத்ரங்களுக்கெல்லாம், கணுறு - கணுற்றென்று போபெற்றிருக்கிற, சதிரவழி - சாமாதயம உள்ள மார்க்கத்தை, கட்டுவார்போல - உண்டாக்குவார் போலே, உலகத்தில் மறைசேர்ந்த - வேதங்களோடே கூடினவையான, உரைகள் தமமால - வாதங்களினால், ஒருபிழையும் - ஒருதவறும், சேராமல் - வராதபடி உபகரித்தார் - உபகாரம் செய்தவர்களுடைய, பலகததும் - அனேகவிதமாக பிதற்றுகிற, பவுத்தர் முதலான - பௌத்தர் முதலிய, பண்டை பராசீனங்களான, பகல் கள்ளர் - பகலில் திருடுபவர்களுடைய (திவா சோரர்) பகட்டு - பரமிக்கச்செய்யும் வாதங்களை, அழிக்க - போக்கடிக்க, பரவும் - (லோகத்தில்) பரவிக்கொண்டிருக்கும், பொய்யாம் - பொய்யான, சிலகற்று - ஜல்பங்களுடைய, சித்தாந்தம் - மதத்தை, அறியகில்லார் - அறியகில்லாதவர்களான, சிறுவர் - அல்பர்களாகிய வையாகரணர்கள், இனி - இதற்குபிறகு, மயங்காமல் - கலங்காமல் இருக்கும்படி, சேமித்தோம் - ரக்ஷித்தோம். 29

[ப-ரை] கண்டதலாதன - காணமுடியாத வஸ்துக்களை - கட்டுதலால் - இருப்பதாக சொல்லுகிறபடியினால், கண்டு - நேரில் பார்த்து விட்டதனால் - விட்டு விட்டபடியினாலும், பண்டு - முன்பே உளதான - இருக்கிற, மறைக்கு - வேதத்துக்கு, பழமையை - வெகு

[ வைசேஷிகாகளின கொளகைகளும அவறறின நிரஸனமும் ]

अत्यन्त वेद वाह्यஙகளான गुरु सुगतजिन मतஙகளையும तत्सग न्धஙகளான कुदृष्टिपक्षஙகளையும निराकरிததவளவிலே चार्वाकादि களைப்போலே वेदததைப் पौरुषेयமெனறும் प्रकृत्यादिகளை யிலலை யெனறும द्रव्य विशेषஙகளிலே वैभाषिकादिகளைபபோலே असत्कार्य वादஞசொலலியும संप्रतिपन्न वर्णादिகளையொழிய अर्थबोधकமாக வேறொனறு கடடுவாரைபபோலே सघातादि व्यतिरिक्तமாக अवयवि तद्गुण सामान्य विशेष समवायाभावஙகளைக கடடியும

1 ‘ काणाद शाक्य पाषण्डै स्त्रयी धर्मो विलोपितः ।
त्रिदण्डधारिणा पूर्वं विष्णुना रक्षिता त्रयी ॥ ’

( காணாத ஶாகய பாஷணடை: தரயீ தாமோ விலோபித: ।
தரிதணடதாரிணா பூாவம விஷணுநா ரக்ஷிதா தரயீ ॥ ’

எனறு धर्म शास्त्र निन्दितரான वैशेषिका वैदिकसंग्रहार्थமாக முறபட

2 ‘ अथाऽतो धर्मं व्याख्यास्यामो यतोऽभ्युदय
निश्रेयससिद्धिः सधर्मस्तद्वचनादाम्नाय प्रामाण्यं ’

( அதாऽதோ தாமம வயாகயாஸயாமோ யதோऽபயுதய
நிசரேயஸஸிததி: ஸதாமஸததவசநாதாமநாய பராமாணயம்)

---

காலமாக இருககையை, மாறறுதலால - இலலை எனபதிலும' ஈசனை - ஈச்வரனை, கொணடதும - அங்கீகரிததும், கொளளாவகை -(வேதஙகளை நமபுகிறவாகள) அஙகீகரியாத பரகாரம, எனறு கூறுத லால - சொலலுகிறபடியினால, கணடகராயநினற - நலல மாரககத திறகு முனபோல நிறகிற, காணாதா - காணாதாகளுடைய, வாதம - வாததததை, கழராறுவம - துகளாககுவோம 30

1 81-ஆம பககம பாாகக

2. இனி இதனால தாமததை விளககுகிறோம எதனால முகதியும மறற சிறு பலனகளும உணடாகுமோ அது தா்மம் இதைச சொலவ தால வேதம பரமாணமாகிறது

எனறு वेदोक्त धर्मததை व्याख्यानं பணண संकलिपत्तु द्रव्य गुणादि षट् पदार्थ साधर्म्य वैधर्म्यादि वर्णनததோடே தலைககடடிவிடடார்கள

இப்படி निरूपिககிற पदार्थ वर्गत्तை भावाभाव रूपத தாலே இரணடு வகையெனபாகள. भावातिरिक्तமான अभावं ஒரு प्रत्यक्षத்தாலே विशदமாககாடட வொணணுமையாலும अतिरिक्ताभावकதனனில கொணட கடடளையிலே परस्पर विरुद्ध स्वरूपஙகளான भावान्तरஙகளாலே अभाव व्यवहारமெலலாம निर्वहिக கையாலும் प्रागभावादिகளுடைய अभावததை भावமெனறு தாஙக ளுமிசைகையாலும் प्रागभाव प्रध्वंसஙகளுககு भावाभावஙகளிரண் டுஙகூட प्रध्वंस प्रागभावஙகளெனறு கடட வேண்டுகையாலும இபप्रकारததிலே पूर्वावस्था परंपरै प्रागभावम् । उत्तरावस्था परंपरै प्रध्वंसाभावம. काल विशेष विशेषित देशविशेषादि ससर्गाभावம், गोत्वादि संसर्गाभावம், गोत्वादि विरुद्ध धर्मஙகள தானே अश्व त्वादि धर्म धर्मि निरूपित विशेषததாலே अत्यन्ताभाव மும अन्योन्याभावமும் धर्मஙகளே தனககு पराभिमताभावஙகளுக குபபோலே परस्पर रूपஙகளே अभावஙகளெனறு निर्वहिககலாமாகை யாலே अवस्था विशेषादि भावஙகள தானே आकार भेदததாலே अभावஙகளான பினபு पदार्थம भावाभाव रूपததாலே இரணடு வகை யெனன விரகிலலை இவவர்த்ததை

1 ‘ असद्व्यपदेशान्नेतिचेन्न धर्मान्तरेण
वाक्यशेषाद्युक्तेः शब्दान्तराच्च ’

( அஸத் வயபதேசா நநேதிசேநந தாமாநதரேண
வாகய சேஷாதயுகதே, ஶபதாநதராசச )

---

1 அஸத இலலாதது எனறு வேதம கூறுவதால ஸதகாரய வாதம ஸரியனறு எனனில அபபடியனறு இருககும வஸதுவே வே றொரு தனமையை இடடு இலலாதது எனபபடுகிறது அஸத எனறு சொலலப்பட்ட பொருளே மேல வாககியததில ‘ஸஙகலபிததது’ எனபபடுகிறபடியாலும இருப்பு இலலாமை இரணடும ஒருபொருளின தனமையே யனறி வேறிலலை எனற யுகதியினுலும ஸதேவ எனறு ஸத தாகவே மறறொரு சொலலால கூறபபடுகினற படியாலும, (ஸாரீ-ஸூத 2—1—18)

எனகிற सूत्रததிலே प्रतिपादिததார.

अभावஙகளுககு भावஙகளோடே विशेषण विशेष्य भावமென றொரு पदार्थान्तरததைச சிலா கடடுமதும कल्पनीय संबन्ध प्रतिबन्दि யாலே निरस्तம அபபடியே अपृथक्सिद्ध द्रव्य गुणादिகள அஞசுககும தநதாம आश्रयஙகளோடே கூட संबन्धமாகக கடடின समवायं नित्य மாய एकமாய ्वै संबन्धिகளுடையவும संबन्धமாய நிறகிற தென பாரகள இதுககு सबन्धि वस्तुககளோடும देशकालஙகளோடும संबन्धान्तरஙகொளளில अनवस्थै வரும் எனறு भयபபடுததாஙகளே இதுககொனறோடும संबन्धமிலலை யெனறு स्वभावததாலே सर्वत தோடும विशिष्ट व्यवहार विषयமாமெனறும் சொலலுவாரகள்.

இபபடியானால समवायமெனறொனறை सविकल्पक विषय மெனனுதல अनुमिति निर्विकल्पक विषयமெனனுதல नित्यानु मेयமென னுதல சொலலி இதுககு स्वभाव विशेषततையும கடடுமதில காட டில, संप्रतिपन्नஙகளான आश्रयाश्रयिகளுககொரு स्वभावததாலே विशिष्टप्रत्यय विषयत्वஙகொளளுகை उचितं

2 'धर्मिकल्पनातो वरं धर्म कल्पना'

(தாமிகலபநாதோ வரம தாம கலபநா)

எனனுஙகணககிலே காணாத समवायததுககுககடடும महिमावைக கணடவறறிலே கடட प्राप्तं

सर्व काल संबन्ध नित्यமெனபாாக்கு नित्यமான समवायत துககு काल संबन्धं இலலையெனன வொணணாது அது கொண டால अनवस्थै வரும. घटादिகளுக்குக कालததோடே संबन्धமாய तद् गुणादिகளுககு काल संयुक्त द्रव्य द्वारा काल संबन्धமாறபோலே

1 புதிதாக ஒரு பொருளைக கலபனை செயவதைக காட்டிலும இருககும பொருளுககே ஒரு தனமையைக கல்பனம செயவது மேலானது.

समवायத்துக்கு समवायिद्वारा संबन्धமென்னுமதுவும், समवायिகளோடே स्वतःसंबन्धமென்னுமாப்போலே காலத்தோடும் स्वतः संबन्धமென்னலாமாகையாலே निरस्तं समवायத்துக்கு सर्व काल संबन्धங் கொண்டால் समवायिகளெல்லாம் नित्यங்களாக प्रसंगि யாதோ? என்னில், இது स्वपक्षोन्मूलनமாம்.

காலத்திற்கும் कालगुण विशेषங்களுக்கும் नित्य संबन्धங் கொள்ளுகையாலே समवायं सर्वकाल संबन्धियாகையால் தான் சொன்ன अतिप्रसंगம் தனக்கே வரும். नित्यद्रव्यान्तरங்களோடே समवायं नित्यसंबन्धமாயிருக்க द्रव्यान्तर गुणादिகளுக்கு तद् द्रव्य संबन्धத்தை अनित्यமாகத் தானுங் கொள்ளாதே कारणाभाव मात्रத்தாலேயாதல், प्रध्वंसराहित्यத்தாலேயாதல், समवायத்துக்கு नित्यत्वம் கொள்ளும்போது प्रागभाव प्रध्वंसाभावங்களுக்கும் नित्यत्वं प्रसंगிக்கும்.

காலத்துக்குப்போலே उभयान्त शून्यதை नित्यत्वமென்னில் இப்போதிதிலே गुणादि समवायं பிறந்ததென்கிற सर्व लोक प्रतीति व्यवहारங்களுக்கு विरुद्धமாம். नित्यமாய सर्वத்துக்கும் एकமான समवायம் ஒரு काल विशेषத்திலே ஒன்றுக்கொன்றை विशेषणமாக்குகிறதென்கைக்குத் தனக்கே नियामकत्वங்கூடாமையாலே नित्य गुण गुणिகளுக்குப்போலே सर्वத்துக்கும் नित्यत्वம் प्रसंगிக்கும்.

विशेषण विशेष्य रूप वस्तु स्वभावத்தாலே नियமஞ் சொல்லும்போது समवायம் अजागलस्तन तुल्यமாம். नित्यानित्य नाना समवाय वादத்திலும் ஒன்று आधारமாகவும் ஒன்று आधेयமாகவும் घटितं ஆகைக்கு समवाय स्वरूपமாத்ரம் नियामकமாக மாட்டாமையாலே आधाराधेय स्वभाव व्यवस्थैயைக் கொள்ளுகை उचितं

कार्यங்களுக்கு कारण समवायமாதல் सत्ता समवायமாதல் जन्मமென்றும் समवायத்துக்கும் समवायமில்லாமையாலே जन्म மில்லை யென்றுஞ் சொல்லுகிறவர்களுக்கு जन्म शब्दार्थமான समवा

யததுககு அனாதித்வஙகொணடால கார்யஙகளுககு ஆதிமத்வஙகொளள விரகிலலையாம. இககாரயததுக கிபபோது ஜன்மமுணடாயிற றென்கிற ஸர்வ பாமர பரீக்ஷக வ்யவஹார விருத்தமுமாம.

நித்ய[மு]மாய நிறகிற ஸமவாயம் கார்யஙகளடைவே வர அவைததின ஜன்மமெனறு பேர பெறறிருககு மெனனில, இபபடிக கொரு ப்ரத்யக்ஷாதி த்ருட ப்ரமாணமிலலாமையாலே ஸாமக்ரீஸந்நிபாதாத்ய வஸ்தா விசேஷமே கார்யஙகளுககு யதாலோகம் ஜன்மமெனறு கொளள ப்ராப்தம் இபபடிக கொளளாதபோது ஜன்மார்த்தமான காரணஙகளுககு வையர்த்த்ய வரும.

காரணஙகள உதபததியினுடைய உத்பதயாததமாக வரு கினறனவனறு, கார்யததினுடைய உத்பத்த்யர்த்தமாக எனறதுவும அனுப பன்னம் உத்பத்தியின ஸ்வரூபத்தையாதல அதிசயததையாதல விளைகக மாடடாததை உத்பத்த்யர்த்தமெனகை நிரர்த்தக வாத மாத்ரமாம.

கார்யார்த்திஙகள காரணஙகள எனனுமபோது கணடதுககுமேல ஸமவாயமெனறொரு உத்பத்திகடட வேணடுவதிலலை. உத்பத்திககு உத்பத்திகொணடால அனவஸ்தை வருமெனனும் தர்க்கமும ஸாமக்ரீ ப்ரவாஹா நாதித்வாப்யுபகமததாலே நிரஸ்தம்.

நித்யமான ஸமவாயததுககும விசேஷண விசேஷ்ய பாவததை ஜ்ஙிப பிததுக கொணடு காரணஙகள ஸபலஙகளாகின்றனவெனறு சில ஜரத்வைசேஷிகா சொலலுமதுவும விசேஷண விசேஷ்ய பாவம் தனனுடைய ஜன்மம் ஸ்வகாரண ஸமவாயாதி ரூபமெனறு கொளள வேணடுகையாலே தத்தோத்தரம் அதிகோத்தரஙகள கணடுகொளவது.

ஏகமாய நித்யமான ஸமவாயம ஸர்வஸம்பந்திகளுக்கும் ஸம்பந்தமாய் நிறகிறதெனறவாகளுககு ஸர்வ தர்மஙகளுககும ஸர்வ தர்மிகளோடும ஸம்பந்தம் ப்ரஸஙகிககும அவவோ த்வந்த்வஸ்வபாவததாலே வ்யவஸ்தை சொல லில ஸமவாயங கட்ட வேணடுவதில்லை தர்மதர்ம்யுபயஙகளுடைய

कार्यत्वததில समवायமும कार्यமெனனும पक्षததில समवायததுக கவைததோடு पूर्वापर सहोत्पत्ति विकल्प दोषஙகணடுகொளவது.

இவாகள मुक्तात्मादि द्रव्य विशेषஙகளுடைய व्यावृत्ति प्रतिपत्तिககாக

1 ‘ नित्य द्रव्य वृत्तयोऽनन्ता विशेषाः ’

( நிதய திரவய வருததயோऽநநதா விசேஷா )

எனறு विशेषाख्य पदार्थान्तरஙகடடினதுவும अनुपपन्नम्. सर्वज्ञரான முகதருககு ज्ञान भोगஙகளில் अत्यन्त साम्यமுணடானாலும व्यापारादि भेदஙகளாலும पूर्वोत्तराद्यादिகளாலும व्यावृत्ति बुद्धि கூடும

सर्व वैशेषिक गुणोच्छेदं பிறககையாலே मुक्तात्माक्கள पाषाण कल्पரெனறு अनुमानததாலே கட்டுமது वेदान्त विरुद्धं प्रकृत्यादि विशिष्ट ब्रह्मकारण वादததில नित्यैक रूपाण्वपरमाणुत्वादिகளிலலாமை யாலே அவைததிலும வேறொரு विशेषஙகடட வேணடா, भावान्तरं ஒழிய अन्योन्याभावததைக கடடுமவனுககு வேறொரு विशेषங கட்டவேண்டுவதிலலே. समान रूपஙகளில अन्योन्याभावं व्यावृत्ति जनकமாக மாடடாதெனனில தாஙகள கட்டின पृथक्त्व गुणததாலே निर्वहिககலாம पृथक्त्वஙகள एक जातियोगததாலே व्यावृत्तஙகளாக மாடடாதெனனில மேல கடடின विशेषஙகளும एकलक्षण योगததாலே व्यावृत्तஙகளாக மாடடாதொழியும. இஙகு जाति साम्यததுககும उपाधि साम्यததுககும வாசி சொலலவும ஒணணாது.

परापर भावेन व्यवस्थितஙகளான सामान्यஙகள जाति सामान्यஙகளெனறு சொனன அவைததுககு प्रतिनियत व्यंजक स्वभावஙகொளளுகையாலே அது தனனாலே एकरूप व्यवहारादिகள घटिககும.

---

1 வைசேஷிக தாசனததில விசேஷஙகள எனறு அங்கீகரிககபபடடவை நிதய தரவயஙகளில இருபபவை எணணிறநதவை

सुखादि बुद्धि व्यवहार विषयமென்று கொள்ளாதபோது कल्पना गौरवं வரும்.

बुद्धिपूर्वமன்றிக்கே जीवनपूर्वकமென்றொரு प्रयत्नத்தைக் கட்டினவிடம் अतिमन्दकृत्यं

1 'अग्नेरूर्ध्वज्वलनं वायोस्तिर्यक् गमनं अणुमनसो श्चाद्यं कर्मेत्येतान्यदृष्टकारितानि'

( அக்னேரூர்த்வஜ்வலநம் வாயோஸ்திர்யக் கமநம் அணுமனஸோ ஶ்சாத்யம் கர்மேத்யேதா ந்யத்ருஷ்டகாரிதாநி )

என்கிறவிவர்களுக்கு अदृष्ट विशेषத்தாலே उच्छ्वास निःश्वासादि கள் घटिக்கும் प्रयत्नो त्पादकादृष्ट विशेषத்தையுங் கொண்டு இத்தாலே प्रयत्नोविशेषத்தையுங்கட்டின்ல अतिगौरवंவரும்.

सुषुप्त्यादिகளில் जीवप्रयत्न निरपेक्षமாக ईश्वर संकल्पத்தாலே उच्छ्वास निःश्वासादिகள் என்னுமிடம் उपनिषदध्ययनादिகள் பண்ணினார்க்குமறியலாம். स्मृति हेतुसंस्कारமாவது वेदान्तमर्या दैயாலே धर्मभूतज्ञानத்துக்கும் द्रव्यत्वं உண்டாகில் बुद्ध्यवस्था विशेषं என்னை அமையும் धर्माधर्मங்களாவன विधिनिषेध विषय वस्तुக்கள் என்னுமிடம் लोक वेदावगतம்.

क्षणिकங்களான कर्मங்களுக்கு कालान्तर भावि फल प्रदानத்தைப்பற்ற द्वार भूतமான अदृष्टமாவது இவர்கள் தாங்களுமிசைந்து श्रुति सिद्धங்களுமான देवता प्रीत्यादिகளே யாகலாம் अदृष्टवदा त्मस योगத்தாலே

1 'अग्नेरू र्ध्वज्वल

( அக்னேரூர்த்வ ஜ்வலநம் )

---

1. நெருப்பு மேல்முகமாக எரிவது காற்று குறுக்காக வீசுவது அணுக்களுடையவும் மனஸ்ஸினுடையவும் முதல் கிரியை இவையெல்லாம் அதிருஷ்டத்தினால் உண்டாக்கப்பட்டவை.

इत्यादिகளென்னுமது अदृष्टं. दृष्टसामग्रियை முன்னிட்டல்லது कार्यं செய்யாதென்று தாங்கள் சொல்லும் ஆப்தத்தோடே विरोधिக்கும். अदृष्टाभावத்தாலே अनुपलब्धि கூடாநிற்க योग्यानुपलब्धियாலே पदार्थाभावनिश्चयமும் கூடாதபடியாம் அல்லாதபோது दृष्टसामग्री உண்டாயிருக்க ஒருக்கால் कार्याभावं கூடாதபடியாம்

ईश्वरादिदेवता बुद्धिविशेषमदृष्टமென்னுமவர்களுக்கு शास्त्रानुगुणமாக यथोपलंभं व्यवस्थै கூடும். இங்கு गुणादिகளுக்கு आश्रयங்களான द्रव्यங்களை ஒன்பதுவகையாக வகுத்ததுவும் उपपत्ति शास्त्र विरुद्धं.

இவைத்தில் पृथिव्यादिகளைந்தும் प्रकृति परिणति विशेषங்களென்று शास्त्र सिद्धங்களாகையாலே पृथिव्यादिகள் நாலிலும் कल्पितपरमाणु नित्यत्वமும் आकाशनित्यत्व विभुत्वங்களும் मनः परमाणु नित्यत्वமும் आगमबाधितங்களாம் இவைத்துக்குச் சொல்லும் अनुमानங்களுக்கு विपक्षे बाधமுமில்லை. अतिप्रसंगादिகளும் வரும் पृथिव्यादि चतुष्टयத்தில் सघातादि विशेषातिरिक्तமாக अवयविशब्दवाच्यமான द्रव्यान्तरத்தைக் கட்டுமது प्रत्यक्ष श्रुत्यादि विरुद्धं இதுக்கு कल्पना गौरवादिகளுமுண்டு ஆகையால் தாங்களிசைந்த अत्यंत तन्तुसंयोग पूर्व काल पट प्रतिपत्त्यादिகளைப் போலே उत्तरकालத்திலும் बुद्धिशब्दान्तरादिகள் निर्वहिக்கலாம்

ताळ पलाश ताटंकादि दशैயில் வேறொரு अवयवि उत्पन्नமாகாதிருக்க ताटंकादि बुद्धिशब्दान्तरादिகள் நடக்கின்றனவென்று தாங்களுமிசைந்தார்கள் இப்படி संप्रतिपन्नातिरिक्तावयविशब्दार्थமில்லாமையாலே अवयविगुणादिகளைப் பற்றும் प्रक्रियैகளுமெல்லாம் आकाशलिपिகளாம்.

दिक்கென்றொரு नित्य विभुद्रव्यத்தைக் கல்பிக்கும் अनुमानங்களுக்கு व्याप्त्यादिகளில்லை. இப்படிக் கட்டுவது वेदान्ताभिमतமன்று दिक् सृष्ट्यादिகள் சொல்லுகிற वाक्यங்களும் अन्यपरங்கள்

जीवेश्वर भेदभिन्नமான आत्मवस्तुவை जडமெனனுமதுவும் अनन्यथा सिद्ध स्वयं प्रकाशत्व शास्त्र विरुद्धம இவாகள विभुககளெனனுமது अणुत्व कण्ठोक्तिயாலும आत्मस्वरूपததுக்கே उत्क्रान्त्यादिகள சொலலு கையாலும अनुपपन्नं

योगिகளுடைய युगपदनेक शरीराधिष्ठानं अदृष्टविशेष सहकृतज्ञान व्याप्तिயாலே கூடும. போன போன விடமெலலாம் आत्मोपलंभமும सुख दुःखाद्यनुभवமும் शरीर विशिष्टात्मगमनததாலே निर्वहिக்கலாம शरीर गमनததையும आत्मगमनததையும कल्पितதால गौरवं வாராதோ எனனில उपलंभस्वारस्यததாலும் शास्त्रததாலுங கொள்ளுகிறவனுககு कल्पनागौरवं வாராது. ஒரு जीवனுடைய अदृष्टததாலே देशान्तरததில भोग्य पदार्थोत्पत्त्यादिகளுககு जीवसन्नि धानापेक्षैயிலலை कर्मानुरूप फलप्रद सर्वज्ञ संकल्प विशेषஙகளாலே सर्वமுமகிடைககும்

जीव विभुत्वங கொணடால एकदेश वर्तिनिमित्तासमवायिक ளாலே பிறககிற अदृष्टததை स्वाश्रय व्यापिயெனறு கொளளவொண ணாது. இபபடிக கொளளப பாரககில [சில] सुख दुःखादिகளுக் கும विभुवாக இசைநத आकाशादिகளில शब्दादिகளுககும स्वाश्रय व्यापित्वं प्रसंगिககும अदृष्टं आश्रयैक देशवर्तिயெனருல அவअदृष्टததில सन्निधानமிலலாத सर्वदेशததிலும भोग्य पदार्थोत्पत्ति கூடாதபடியாம

अद्रव्यமான अदृष्टததை संचारिயாகக வொண்ணுது. अदृष्ट संक्रमणवादம दानविशेषादिகளாலே अदृष्टान्तरोत्पत्तिपरं. आत्मैक देश वर्त्तियான अदृष्टததாலே आत्माவுககு काय करणादि सन्निधानமுடைய सर्वप्रदेशததிலும भोगोत्पत्तिயெனருல विभुत्वाभिमताकाशததில एक देशवर्ति विभाग शब्दஙகளாலே कृत्स्नाकाशததிலும शब्दोत्पत्ति प्रसंगिதது शब्दஙகளும सार्वत्रिकஙகளாய सर्वருககும सर्वशब्दोपलंभप्रसंगंவரும.

ईश्वरனுககு ज्ञान चिकीर्षा प्रयत्नஙகள மூன்றையுமாதல் ज्ञान प्रत्ययஙகளிரணடையுமாதல் கொணடு இவறறை नित्यமாககி

जीवादृष्टं சஹகரித்தபோது இவை कारणங்களாமென்னுமவனுக்கு ईश्वरस्वातन्त्र्यं अपहास्यமாம இச்சையுண்டாய प्रयत्नமும நடவாநிற்க गमनादिक्षमரல்லாதவர்களைப போலே ईश्वरனும் தன்னாலல்லது जीवர்களுக்கு सुख दुःखங்கள கொடுக்க प्रयासபபட்டுக கட்ப படா மலிருக்கிறுனும

இவர்களில सर्वात्म मोक्षं கொள்ளுமவர்களுக்குப் பின்பும் ईश्वरனுடைய इच्छाप्रयत्नங்கள நடக்கையாலே कार्यं கடைபபடும பக்ஷத்தில कर्म निरपेक्ष संसारமாய, கடைபபடாத பக்ஷத்தில संसरिக்கைக்கு सन्नद्धனாய सर्व लोक दुर्जनனன ராசவரனுக்கு नित्यமாக நெஞ்சாரலாம(படும்)படியாம. மற்றிவர்கள पाकज प्रक्रियै द्व्यणुकादि प्रक्रियै द्विपृथक्त्वादि प्रक्रियै विभागज विभागादि प्रक्रियै என்றுபபோலே சொல்லும परिभाषाप्राय प्रक्रिया जालங்கள எல்லாத் துக்கும உக்த न्यायங்களாலே उत्तरங்கள கணடு கொள்வது.

இவ்வைशेषिक पक्षத்தை

1 'धर्मं व्याख्यातु कामस्य षट्पदार्थोपवर्णनम् ।
सागरं गन्तुकामस्य हिमवद्गमनोपमं ॥'

(தர்மம வயாக்யாதுகாமஸய ஷட்பதார்த்தோபவர்ணநம ।
ஸாகரம கந்துகாமஸ்ய ஹிமவத்கமநோபமம ॥)

என்றும்

---

1. தர்மத்தை விளக்குகிறேன என்றவர் ஆறு பதார்த்தங்களை விளக்குவது ஸமுத்திரத்திற்குப் போக விரும்புகிறவர் இமயமலைக்குப போவது போன்றது.

2. ‘कणान्वा भक्षयेत्कामं माहिषाणि दधीनिव ।
युक्तियुक्तं तु गृह्णीमो न तु तद्वावाक्यगौरवात् ॥’

( கணநவா பக்ஷயேதகாமம மாஹிஷாணி ததீநிவ ।
யுகதியுகதம து கருஹணீமோ ந து ததவாகயகௌரவாத॥)

என்றும உபாலம்भित்தார்கள வேदान्त सूत्रकाரரும

3. ‘ महद्दीर्घवद्वा ह्रस्व परिमण्डलाभ्यां ’

( மஹததீாகவதவா ஹரஸவ பரிமணடலாபயாம ॥ )

எனறு தொடஙகி

4. ‘ अपरिग्रहाच्चात्यन्तं अनपेक्षा ’

( அபரிகரஹாசசாதயநதம அநபேக்ஷா )

इत्यन्तஙகளான सूत्रங்களாலே बहिष्करிததா

ஆழவாரும்

---

2. கணஙகளை-நொயயை-தினறு காணுதா என போ பெறறிருக கடடும எருமைததயிரை அருநதி மறறொருபெயரை பெறறிருககடடும் அவா சொலவது யுகதிககுப பொருநதியிருந்தால கரஹிககின்றோம அவா சொல எனற மதிபபால கரஹிககமாட்டோம

3

4 பெரியோர்கள அங்கீகரிககாதபடியாலும மோக்ஷமபெற விருமபுகிறவாகள வைசேஷிக தாசனததை ஆதரிககக கூடாது

5 ‘ சமணரும சாக்கியரும ’

எனகிற நிலேயிலே இபபடிக கொததவாகளே,

6 ‘ மலிநது வாது செயவீாகளுட ’

எனறுரு கோாவையாக அருளிச செயதாா

ஆகமததை அனுமான மெனகையாலும
அழியாத மறையழிகக நினேததலாலும *
போகமறறு ஓா உபலம போல் கிடககைதானே
புணணியாககு வீடெனறு புணாததலாலும *
மாகமொதத மணிவணணன படியை மாறறி
மறறவனுக கொருபடியை வகுததலாலும *
காகமொதத காணுதன கணணே வாஙகிக
காககைககு ஆரெனறு அலறறல காட்டினேமே 31

इति श्रीकवितार्किकसिंहस्य सर्वतन्त्र स्वतन्त्रस्य

श्रीमद्वेङ्कटनाथस्य श्रीमद्वेदान्ताचार्यस्य कृतिषु

श्री परमतभङ्गे

॥ वैशेषिक भङ्गाधिकारः पञ्चदशः ॥

( பதினேநதாவது வைசேஷிக பஙகாதிகாரம )



---

[ப-ரை] ஆகமததை வேததததை, அனுமானம - ஊகித்தறியும பரமாணம , எனகையாலும - எனறு சொலலுகையாலும அழியாத - ஒருநாளும நாசமடையாத, (அதாவது நிதயமாய இருககிற) மறை - வேதததை, அழிகக இலலேஎனறு சொலல, நினேததலாலும- எணணுகிறபடியினுலும, போகமறறு - சுக துக்கானுபவம இல்லாத, ஓா - ஒரு உபலமபோல - கலலேபபோல, கிடககைதானே - இருககைதானே

புண்ணியாக்கு - நலலகாமஙகளை செயதவாகளுககு, வீடெனறு - மோக்ஷமெனறு, புணாததலாலும- சொலலுகையாலும, மாகமஒதத - ஆகாசததைபோல தோஷமிலலாமல இருககும, மணிவணணன - ரததினஙகளபோனற ஸவபாவததைஉடைய பகவானுடைய, படியை, ப்ரகாரததை (ஸவபாவாதிகளை) மாறறி - வேறுவிதமாக சொலலி, அவனுககு - அநதபகவானுககு, மறறு - ஸாஸதிரஙகள இசையாத வேறு ஒரு பரகாரததை, வகுததலாலும - இருபபதாக சொலலுவதாலும, காகம ஒத்த - காகாஸுரனுககு ஸதருசமாக இருககும. காணுதன - காணுதருடைய, கணணை-கணகளை, வாஙகி - பிடுஙகி, காககைககு - ரக்ஷிககைககு, ஆா - யாாசகதி உடையவாகள, எனறு, அலறறல - கததும்படி, காட்டிடுேம - நிரூபிததோம அவாகள மதததை, நிரஸிததுக் காட்டிடுேம எனறபடி 31



|| श्री : ||

|| श्रीमते निगमान्तमहादेशिकाय नम ||

*சிராாதுரபபுல திருவேஙகடமுடையான திருவடிகளே சரணம*

|| न्यायविस्तारविरोध निस्ताराधिकार षोडश ||

## பதினாறுவது
## ந்யாய விஸ்தார விரோத நிஸ்தாராதிகாரம்

---

[நயாயவிஸதார விரோதநிஸதார பரதிஜஞை—அவாகள் ஸவமததததிறகுச சொலலும ஏறறம (1) பதினைகு விதயாஸதாநஙகளில ஒனருக மநவாதிகளினுல கணககிடபபடடிருககை, (2) ஸமாததா எனனபபடும அக்ஷபாதரால பரவாததிககபபடடிருககை (3) வேதாாதத ஸஙகரஹததில நிரஸிககபபடடிருபபது மறற அாவாசீன மதஙகளைப பறறியதாயிருககை (4) சீக்ஷாயாம வாணசிக்ஷா எனகிற சுலோகததில ஸதாபிககபபடட பராமாணயததையுடையதாயிருககை எனபவை — தநநிராகரண பரகரணததில அதிலுளள தோஷாதிகள மடடுமே நிரஸிககபபடடிருபபதினுல விதயாஸதாநம பாதிககபபடவிலலை—கௌதமா வைசேஷிகாதிகளைப பினபறறவிலலை-உதயநாதி மதபரவாததநததிறகுக காரணம ]

* கோதம நூலகளைக குறறமிலாவகை கூடடலுமாம
கோது கழிததொரு கூறறில குணஙகளைக கொளளவுமாம
யாதுமிகழநதொரு நீதியை யாமே வகுககவுமாம
வேதியா நனனய விததரமெனபது மெயயுளதே 32

---

*[ப - ரை] கோதம நூலகளை — கௌதமருடைய நயாய ஸூதரஙகளை, குறறம இலாவகை-வேதவிரோதம இலலாதபடி, கூடடலுமாம — நிருபணம செயதலோ, கோது கழிதது — அததகைய தோஷததைத தளளி, ஒரு கூறறில—ஒரு பாகததில, குணஙகளை- நலல அமசஙகளை, கொளளவுமாம-ஏறறுககொளவதோ, யாதும — எலலாவறறையும, இகழநது — தளளிவிடடு (உபேக்ஷிததுவிடடு), ஒரு நீதியை — புதிய ஒரு நீதிகரநததததை, யாமே — நாமே, வகுககவுமாம — இயறறுவதோ (செயயலாம), வேதியா — வேதவேதாநதஙகளின பராமாணயததில நமபிககையுடையவா அஙகீகரிதத, நலநய விததரம எனபது — சிறநத நயாயவிஸதரம எனனும விதயாஸதாநம எனகிற ஒனறு, மெய உளது — உணமையில இருககிறது

[ ந்யாய விஸ்தார விரோத நிஸகார ப்ரதிஜ்ஞை ]

वैनाशिकादि மதங்கள் போலே अर्ध वैनाशिकादि மதமும் अपन्यायमूलமென்று அறிவித்தோம். இத்தை समान तन्त्रமாக संग्रहित्त न्याय सिद्धान्तिகளை நிரஸிக்கிறோம்

[ அவர்கள் ஸ்வமதத்திற்குச் சொல்லும் ஏற்றம் ]

1 "पुराणन्यायमीमांसाधर्मशास्त्राङ्गमिश्रिताः ।
वेदाः स्थानानि विद्यानां धर्मस्य च चतुर्दश ॥" என்றும்,

2 "अङ्गानि वेदाश्चत्वारो मीमांसा न्यायविस्तर ।
पुराणं धर्मशास्त्रं च विद्या ह्येताश्चतुर्दश ॥" என்றும்

मन्वादि महर्षिகள் धर्मविद्यास्थानங்களாகப் परिगणित्त பதி ஞலில் ஒன்றுன न्याय शास्त्रத்தை நிரஸிக்கலாமோ ? இத்தை நிரஸிக்கில் மற்றுமுள்ள विद्यास्थानங்களையும் यथारुचि निरसिக்கத் தட்டென்ன ?

लोक वेदोपयुक्त व्यवहारமான प्रमाणादि प्रस्थानத்தில் वेद बाह्यர் சொல்லும் வழிகள் अनुपजीव्यங்களாகையாலே वैदिकोत्तமனாய் मन्वादि तुल्यமாக महास्मर्ताக்களிலே ஒருத்தனைப் परिगृहीतனாய் महेश्वरवाद वृत्तान्त विशेषத்தாலே अक्षपादனென்று பேர்பெற்றுப் पक्षिलனகிற மஹர்ஷி भाष्यம் பண்ணும்படி सूत्रம் சொன்ன गौतमனுடைய पक्षத்தை उपेक्षिக்கப்போமோ ? ஆனபின்பு उद्योतकर वाचस्पतिप्रभृतिகள் उपन्यसिக்கும் अर्थங்களிலே சில வற்றை உபேக்ஷித்தாலும் सूत्रभाष्यங்களை स्वीकरिக்க வேண் டாவோ ? वेदार्थसंग्रहத்திலும்

---

1 யாஜ்ஞ—ஆசார—3. புராணம, நயாயம, மீமாமஸை, தாம சாஸதரம, ஆறு அஙகங்கள இவற்றுடன கூடிய நானகு வேதஙகள இவை பதினனகும கலவிககும தாமத்துககும ஆதாரஙகள்.

2 விஷ்ணுபு—3—17—27. அஙகஙகள ஆறு, வேதங்கள நானகு, மீமாமஸை, நயாயம், புராணம, தாமசாஸதரம இவை பதினனகும வித்யைகள (சாஸ்தரஙகள).

1 "चार्वाकशाक्यौलूक्याक्षपादक्षपणककपिलपतञ्जलि -
मतानुसारिणो वेदबाह्या. वेदावलम्बिकुदृष्टिभि: सह निरस्ताः"

என்று तन्मतानुसारिகளான अर्वाचीनரையன்றே निरसितதது? இப்படி बुद्धिபண்ணியன்றே अभियुक्तரும்

2 " शीक्षायां वर्णशिक्षा "

என்கிற श्लोकத்திலே विद्यास्थानங்களோடொக்க न्यायத்தையும் परमार्थ ज्ञानोपयुक्त वेदोपकारकமாக सङ्ग्रहिத்தது என்னில்?

[ வித்யாஸ்தாநம் பாதிக்கப்படவில்லை ]

न्याय विस्तरம் என்கிற विद्यास्थानத்தை நிரஸிக்கிறோமல்லோம். गौतमனுடைய प्रभावத்தை अपह्नविப்பதும் செய்யோம். वेदविरोधமுள்ளபோது प्रजापति पशुपति बृहस्पतिகளுடைய वाक्यங்களை वेदाविरुद्धமாக निर्वहिக்கலானவை निर्वहिக்கவும், प्राचुर्येण सवादமுள்ள प्रबन्धங்களில் विरोधाधिकरण न्यायத்தாலும்

3 " मन्वर्थविपरीता तु या स्मृति. सा न शस्यते "

என்று नियमिக்கையாலும் प्रतिकूलांशத்தைக் கழிக்கவும், प्रधान तात्पर्य विरोधமுள்ளபோது लोकायत शास्त्रத்தைப்போலே प्रबन्धமாக उपेक्षिககவும் प्राप्तமாறுபோலே இங்கும் सर्व सूत्रங்களையும் समीचीनार्थ विषयமாக योजिத்தல், निर्वहिக்க அரிய एकदेशங்களை उपेक्षिத்தல், वैशेपिकोक्त वस्तु व्यवस्थैயிலே तात्पर्यமென்று

---

1 சாாவாக பௌதத வைசேஷிக நயாய ஜைந ஸாஙகய யோகமத அநுஸாரிகளாய வேதததுககுப புறமபே இருபபவாகள, வேதததை பரமாணமென ஏறறு அதறகு விபரீதாாத்தம சொலலி அதனால குதருஷடிகளெனறு வழஙகுமவரோடு நிராகரிககபபட்டனா

2 ஸ்ரீரஙகராஜஸ—2—18 சிகைஷ எனனும வேதாஙகததில அகஷரஙகளின உசசாரண கரமாதிகளுடைய சிகைஷ செயயபபடுகிறது

3 மனு கூறிய அாததததுககு முரண்பட்ட ஸமருதி ஏறறுக கொளளபபடுவதிலலை

வர்ணிக்கிறவர் படியாகில் வைசேஷிகன்தன்னைப்போலே நிசேஷமாக உபேக்ஷித்தல் செய்கை உபபன்னம்.

மோக்ஷத்துக்கு ஸாக்ஷாத் அங்கமல்லாமையாலே த்ரவ்யகுணாதி பதார்த்த சிந்தையை உபேக்ஷித்த கௌதமன் வைசேஷிகோக்தத்தை உபஜீவித்துப் போகிறானென்கைக்கு ஒரு ப்ரமாணமில்லை.

1 "व्यक्त्याकृतिजातयस्तु पदार्थः"

இத்யாதி ஸூத்ரங்களிலே ப்ரஸக்தமான பதார்த்தத்தை லோகவேதாநுஸாரேண சிஷ்யர்கள் கண்டுகொள்ளுகிறார்கள் என்று நினைத்தானாக அமையும்

ஆகமத்தை அநுமாந பஹிர்பூதமென்றும் வாயுப்ரத்யக்ஷத்வாதிகளையும் கொள்ளுகிறவர்களுக்கு வைசேஷிகரோடு நிசேஷ ஸம்வாதமில்லை. விவாதம் பண்ணத் தவிராதபின்பு யதாப்ரமாணம் ஸர்வ பதார்த்த சிந்தையும் பண்ண அமையும்

[ உதயநாதி ப்ரவர்த்தநத்துக்குக் காரணம் ]

இப்படிக் கொண்டன்றோ ந்யாயந்தன்னில் பூஷண உதயநாதி மதபேதப்ரவ்ருத்தி வருகிறது வைசேஷிகச்சாயையிலே வேதாந்தாவலம்பி மதாந்தரங்களில சொன்ன அர்த்தங்களுள்ளவையும் ஸுவர்ணச்யாமிகா ந்யாயத்தாலே சோதித்துக்கொள்வது ஆனபின்பு ந்யாய சாஸ்த்ரங்களில் குசகாசாவலம்பன கமநிகையாதல் விருத்தாம்ச பரித்யாகமாதல் அநுகூல க்ரந்தாந்தர கரணமாதல பண்ணிச் சதுர்தச வித்யாஸ்தாநஸம்பத்தி கொள்ளலாம்

இங்ஙனம் கொண்டாலல்லது வித்யாஸ்தான பரிகணனை பண்ணுகிற தர்மசாஸ்த்ரங்கள்தம்மோடு விரோதம் கழிக்க விரகில்லை ஆனபின்பு பரமாணுகாரணவாதம் கேவலநிமித்தேச்வரவாதம் வேதபௌருஷேயத்வம் பாஷாண கல்பமோக்ஷமென்றாற்போலே சொல்லும் விபரீதார்த்தங்களில் தாத்பர்யம் கொள்ளாதே தவிர்ந்து தாங்களே தாத்பர்யாந்தரம் காட்டும் ஸூத்ராந்தரங்களில் போலே எங்கும் வேதாந்தங்களோடு ஏகரஸமாக யோஜிக்கை அக்ஷபாத பக்தருக்கு அநுரூபம்.

---

1. வ்யக்தி – தனித்த உருவம், ஆக்ருதி – அவயவ அமைப்பு, ஜாதி – கோத்வம் முதலியது. இவை மூன்றும் சொல்லின் பொருள்.

நானமறைககுததுணையாக நலலோரெணணும
நாலிரணடிலொனறுன நயநூலதனனில
கூன மறைததல கோதுளது கழிததல மறறோ
கோணுத கோதில வழிவகுததலனறி
ஊனமறைதத வுயிரொளி போலொதத தொவவாது
உயிரிலலாக காணுதமுரைதத தெலலாம
வானமறைகக மடிகோலும வணணமெனரோ
மறறிதறகாா மறுமாறறம பேசுவாரே. 33

इति श्रीकवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य श्रीमद्वेदान्ताचार्यस्य कृतिषु
श्री परमतभङ्गे
न्यायविस्तार विरोध निस्ताराधिकार षोडश ॥
பதினாறுவது நயாய விஸதார விரோத நிஸதாராதிகாரம
॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नम ॥

---

(பதவுரை) — நானமறைககு — நானகு வேதஙகளுககும, துணையாக — ஸஹகாரிகளாக, நலலோா — ஆபததமாகளான பூாவாகளாலே, எணணும — எணணபபடட, நாலு இரணடில ஒனறுன (எடடு) ஆறு பரமாணஙகளில ஒனறுன, நயநூல தனனில — நயாய சாஸதரததில, கூன — குறறஙகளை, மறைததல — மறைததுவிடுதல, கோதுளது — அஸாரமாக இருககும அம சததை, கழிததல - தளளிவிடுதல, மறறோ — வேறெனறுன, கோணுத — ருஜுவான, கோதுஇல — அஸாரமலலாத, வழி— மாாககததை வகுததல நிஷகாஷிததல, அனறி இபபடிபபடட வழிகளில ஒனறனறி ஊன-சரீரததாலே மறைதத-மறைககப படடிருககும, உயிா-ஜீவனுடைய, ஒளிபோல பரகாசமபோல (தாமபூதஜஞாநமபோல), ஒததது - (நயாய சாஸதரம எனறு எணணபபடடதோடு) ஸதருசததோடே, ஒவவாது - ஸதருச மாகாது, உயிா இலலா - உயிா இலலாத, காணுதம - காணுத சாஸதரததாலே, உரைததது எலலாம - சொலலபபடட பர மேயஙகளெலலாம எனரோ - ஏதேனும ஒருநாள, வான மறைகக-ஆகாசததை மறைகக, மடிகோலும வணணம - மடி கடடுவது போலாகும, மறறு-வேறு, ஆர்-எவாகள, இதறகு மறு மாறறம - வேறு விதமாகக கூறுவதை, பேசுவாா - சொலலு வாாகள ? 33

|| श्री ||

|| श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ||

சீராாதூபபுல திருவேஙகடமுடையான திருவடிகளே சரணம

## || निरीश्वर मीमांसक निराकरणाधिकार. सप्तदशः ||

## பதினேழாவது நிரீச்வர மீமாம்ஸக நிராகரணுதிகாரம்

[ நிரீச்வர மீமாம்ஸக நிராகரண ப்ரதிஜ்ஞை — அவர்களின் கொள்கைகளும் அவற்றின் நிரஸநமும் ]

* ஈசனு மறறணஙகு மிலதெனறெழில நானமறையில
பேசிய நலவினையால பெருமபாழுககு நீரிறைககும்
நீசரை நீதிகளால நிகமாநதததின நூலவழியே
மாசின மனஙகொடுததும மறுமாறறஙகள மாறறுவமே 34

वेद परिकरங்களான विद्यास्थानங்கள் பத்தில் வ்யவஹாராதி मर्यादा व्यवस्थापकமான प्रधान ந்யாய விஸதர சாஸ்த்ரத்தில் उपप्लवங்கள் பரிஹரிககும்படி சொன்னோம. இத்தாலே ஸாமாந்யேந शिक्षितங்களான ந்யாயங்களை வேத வாக்யங்களிலே उदाहरित्तுககொண்டு वेदार्थ विचारार्थமாக प्रवृत्तமான மீமாமஸா சாஸத்ரம்

---

* [பதவுரை] ஈசனும — ஸாவேசவரனுகிய பகவானும், மறற அணஙகும - இதர தேவதைகளும, இலது - இலலை, எனறு - எனறு சொலலிககொணடு, எழில - பரகாசமுளள (அதாவது ஸவயமபரமாணமான] நானமறையில - நானகு வேதஙகளில, பேசிய - சொலலபபடட, நலவினையால - நலல காமஙகளால, பெருமபாழுககு - சாகுபடி செயயமுடியாத உபயோகமறற நிலததிறகு, நீா இறைககும - தணணீா பாயசசும, நீசரை - அறபாகளான மீமாமஸகாகளை, நீதிகளால - நயாயஙகளின உதவியால, நிகமாநதததின நூல வழியே - வேதாநத சாஸத ரததினபடியே, மாசில - குறறமிலலாத, மனம கொடுததும - மனததைக கொடுததும, மறுமாறறஙகள - வேறு விதமாகச சொலலுவதை, மாறறுவம - கணடிததிடுவோம

[குறிபபு — கீழ அதிகாரஙகளில போலே இநத அதிகாரததில நிரஸந பரதிஜ்ஞைககு அடுதது அநத மதததின கொளகைகளை நிரூபிதது அவறறை மேலே ஒனறொனருய நிராகரணம செயயவிலலை நிரஸந பரதிஜ்ஞையானதும அவாகள கொளகைகளில் ஒனறைக கூறி அதை நிரஸிதது, அதறகுமேல மறறொரு கொளகையைக கூறி அதை நிரஸிதது இபபடியே மேலே நிரூபிககபபடடிருககிற விததியாசம கணடு கொளக ]

1 "कर्मदेवताब्रह्मगोचरा सा विधोद्भौ सूत्रकारतः ॥

என்கிறபடியே काण्ड त्रयरूपமாய் एकरूपोपकार விசேஷத்தாலே एक विद्यास्थानமாய் षट्क अध्यायादिகளில் போலே अवान्तर विषयादि भेदமும், प्रबन्धैक्यविरोधமும் இல்லாதபடி औचित्य नियतक्रम விசேஷத்தாலே एकप्रबन्धமாய் நிற்க, இதில் कर्म ब्रह्म भागங்களைப் பரஸ்பர विरुद्ध சாஸ்த்ரங்களாக்கிக் कर्म भाग प्रतिपाद्य कर्तृ करण आराध्य फलादि भेदங்களை भ्रान्ति परिकल्पितங்களென்று கழித்து, शिरो मात्रத்தைத் தத்த்வ விஷயமென்று பற்றின ராஹு மீமாம்ஸகரை முன்பே நிராகரித்தோம்.

உத்தமாங்கத்தை உபேக்ஷித்துக் कर्म भागमात्रத்தைப் பற்றின कबन्ध மீமாம்ஸகரை நிராகரிக்கிறோம்.

இவர்கள் ஈச்வர நிராகரணம் பண்ணுமிடத்தில் அநுமாநமும் निरस्तம். नेश्वर என்றது यथाहृदयமாகில் आनुमानिकेश्वर वादिகளை निराகரித்து वेदान्त प्रसिद्धेश्वरனை विचारिக்கிற ब्रह्मकाण्डத்தோடு विरोधமில்லையாக்கலாம். आगमिकனான ஸர்வேச்வரனையும், अर्वाचीन देवतैகளையும் பற்ற

2 "विग्रहो हविरादानं युगपत् कर्मसन्निधिः ॥
प्रीति. फलप्रदानं च देवतानां न विद्यते ॥"

என்றும் சொல்லுமது कर्म प्राशस्त्याभिसन्धियாலே अतिवादமாகில் अभिप्राय विरोधமில்லாமையாலே अनादरिயாதொழியலாம். இதுவே ஸித்தாந்தமென்று अभिप्रेतமானால் आगम सिद्धமான அதீந்த்ரிய விஷயத்தில் இவர்களை अर्धलोकायतिकரென்று अना-दरिக்க प्राप्तம்.

---

1 அநத மீமாமஸை காமததைப பறறியது – தேவதையைப பறறியது – பரஹமததைப பறறியது எனறு மூனறு வகையாக முறையே ஜைமினி – காசகருதஸநா – பாதராயணா எனற மூனறு ருஷிகளிடமிருநது உண்டாயிறறு

2 யாகஙகளில உததேசயாகளான தேவாகளுக்குச் சரீரம கிடையாது ஹவிஸஸை அவாகள் ஏற்பதிலலை, ஒரே காலததில யாகம நடககும பல இடஙகளில அவர்கள வந்து இருபபதிலலை, பரீதி அடைவதிலலை, பலன தருவதுமிலலை.

शब्दाधिकरण अर्थवादाधिकरण देवताधिकरण अपूर्वाधिकरणादि களிலே वेदान्त विरुद्धமாக இவர்கள் வ்யாககயாநம் பண்ணு மிடங்களுமெல்லாம் वेदान्तानुगुणமாகவே நிர்வஹிககலாம. ஜைமிநிக்கு ब्रह्म विषयाभ्युपगमமுண்டென்னுமிடம் பல வேதாந்த ஸூத்ரங்களிலே प्रसिद्धம ஜைமிநி மதமாகச் சில अर्थங்களை எடுத்துக கழித்ததும் अन्य परोक्तिகளாக கொண்டு मन्दमतिகள் கலங்காமைக்காமத்தனை. प्रधान अर्थ संवाद भूयस्त्वயுண்டானால் स्मृत्यधिकरण न्यायத்தாலே क्वचित् क्षुद्रविरोधங்களுண்டாய்க் கழிந் தாலும प्रबन्धैक्य विरोधம் வாராது.

1 "सहितमेतच्छारीरकं जैमिनीयेन षोडशलक्षणेनेति शास्त्रैकत्वसिद्धिः॥"

என்கிற वृत्ति ग्रन्थத்தின்படியே काण्डत्रयமும் एकप्रबन्धமாகக் குறையில்லை मन्त्र अर्थ वादங்களிலும், தர்மசாஸ்த்ர-இதி ஹாஸ-புராணங்களிலும் विधिशेषமாகவும், ஸ்வதந்த்ரமாகவும் சொல்லும் अर्थங்களுக்கு प्रत्यक्षादि विरोधமில்லாதபோது स्वत ப்ராமாண்ய ந்யாயத்தாலே सत्यत्वம் கொள்ள प्राप्तம்.

अन्य पर वाक्यங்களிலும் तात्पर्य अनुगुण स्वार्थसत्यत्वம் லௌகிக வாக்யங்களிலும் रात्रि सत्राधिकरणादिகளிலும் सर्वसमतம்

இப்படியால் க்ஷணிக கர்மம் कालान्तर भावि फलத்தைத் தரும்போது நடுவே घटकமாக க்ரியா சக்தியாதல் फलத்தி னுடைய உத்பத்தி சக்தியாதல் இரண்டுமொழிய வேறோர் அபூர்வமாதல் கட்டவேண்டுவதில்லை श्रुतिप्रतिपन्न देवता प्रीत्यादि களை अनादरித்து வேறொன்றை द्वारமாகவாதல் प्रधानமாகவாதல் கட்டுமவர்களுக்கு श्रुत हान अश्रुत कल्पनादि दोषம் வரும். शब्द வ்யாபார விசேஷத்தையாதல், அபூர்வத்தையாதல் विधि प्रत्यय वेद्यமென்னுமதுக்கு व्युत्पत्त्यादि विरोधம் கண்டுகொள்வது. पर्याय शब्द भेदத்தாலும், विशेषण भेदத்தாலும் देवता भेदம் சொல்லுகிற வித்தால் देवतைக்கு मिथ्यात्वமாதல், शब्दादिमात्र रूपत्वமாதல் உண் டாகமாட்டாது. उद्देश्याकारभेदம் வருமளவேயுள்ளது.

द्रव्य देवता ஸாமாந்யத்தில் द्रव्य बलीयस्त्वம் சொல்லுமதும் प्रमाणासक्ति विशेष मात्रमूलம மற்றிவர்கள் पदार्थचिन्तैகளில் ஜைந வைசேஷிகாதிகளை अनुवर्तिத்து भेदाभेद - அவயவி - பரமாணு - ஸமவாயாதிகளை प्रतिपादिக்கும் அம்சம் तत्तत्सिद्धान्त दूषणத்தாலே दत्तोत्तरம் ஸ்வதந்த்ரமாக अनुमानाभासादिகளைக் கொண்டு

तम प्रभृतिகளை விஷயமாகக் கட்டும் அம்சங்களும் स्वाभिमत-श्रुत्यादि विरोधத்தாலே निरस्तமாம்.

ஆனபின்பு वेदान्तानुगुणமாக द्रव्याद्रव्यத்தைக் கொண்டு पदार्थव्यवस्थैயை நிறுத்தி, ஸர்வாந்தர்யாமி பரமபுருஷ ஸமாராதந ரூபமாக शास्त्रीय कर्मवर्गத்தையும் இசைந்து तत्तदधिकारानुगुण प्रवृत्ति निवृत्ति धर्मங்களை விம்சதி லக்ஷண மீமாம்ஸா சாஸ்த்ரத்தைக் கொண்டு விவேகிக்கை उचितம்.

परस्पर विरुद्ध शबर गुरु कुमारिलादि बहुजल्प भक्तियாலே பற்றி னது விடாதே நின்றால்

1 "दृढपूर्वश्रुतो मूर्खो धर्माणामविशारदः ।
वृद्धानपृच्छन् सदेहानन्धः श्वभ्रमिवच्छति ॥"

என்னும்படியாம். இப் ப்ரகாரங்களெல்லாம் ஸேச்வர மீமாம் ஸாதிகளிலே सोपपत्तिक सूत्रस्वरससिद्धமாக प्रतिपादिத்தோம்.

கலைகடல போலொரு நீராம் சூததிரததைக்
கவநதனையு மிராகுவையும போலக் கண்டு
நிலைவுடனே நிலைததரும மிகழநது நிற்கும
நீசாநிலை நிலைநாடா வணண மெணணி

---

1. பார காண. 72-74 முனனுல அறிநததையே உறுதியாக வுடையவனும மூடனும தாமஙகளின் விஷயததில ஐஞானமிலலாத வனும ஸநதேஹஙகளைப் பெரியோாகளிடம கேளாதவனுமிருபப வன குருடன பளளததில விழுவதுபோல அநாத்ததததை அடைவான

[பதவுரை] கலை கடலபோல - சபதிககும ஸமுததிரம போல, ஒரு நீராம - ஒரே ஜல ரூபமாகவிருககும, சூததி ரததை - மீமாமஸா ஸூததரஙகளை, கவநதனையும் இராகுவை யும போலக கணடு - கபநதனையும ராகுவையும்போல (அதாவது கபநத மீமாமஸகன, ராஹு மீமாமஸகன எனறு இரு பிரிவுகளான மீமாமஸகாகளாக), கணடு, நிலைவுடனே - அறிவுடனே, நிலை - ஸதிரமாக இருககிற தருமம - தாமமாகிய ஈசவரனை, இகழநது - இலலை எனறு, நிறகும் - நிறகினற, நீசர் நிலை - அலபாகளான மீமாமஸகா களின மதம, நிலைநாடாவணணம - ஸதிரமாக இலலாத வாறு, எணணி - நினைநது, வினை பரவு - காமஙகளைப

வினை பரவு சைமினியார் வேதநூலை
வேதாந்த நூலுடனே விரகால் கோத்த
முனையுடைய முழுமதி நம்முனிவர் சொன்ன
மொழிவழியே வழியென்று முயன்றிட்டோமே. 35

इति श्रीकवितार्किकसिंहस्य सर्वतन्त्रस्वतन्त्रस्य
श्रीमद्वेङ्कटनाथस्य श्रीमद्वेदान्ताचार्यस्य कृतिषु

श्री परमतभङ्गे निरीश्वर मीमांसक निराकरणाधिकारः सप्तदशः ॥

பதினேழாவது நிரீச்வர மீமாம்ஸக நிராகரணதிகாரம்

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥



---

புகழ்கின்ற, சைமினியார் வேத நூலை - ஜைமினி ஸூத்ரங்களை, வேதாந்த நூலுடனே - ப்ரஹ்ம ஸூத்ரங்களுடனே, விரகால் கோத்த - இரண்டும் ஒரே சாஸ்த்ரம் என்று நிரூபித்த, முனையுடைய-கூர்மையுள்ள, முழு-பூர்ணமான, மதி-ஜ்ஞானத்தை யுடைய, நம் - நம்முடைய, முனிவர் - போதாயந, டங்க, த்ரமிடாதிகளுடைய க்ரந்தங்களைப் பின்பற்றி மனனசீலரான எம்பெருமானார், சொன்ன - வெளியிட்ட, மொழி வழியே - ஸ்ரீஸூக்தி மார்க்கமே, வழியென்று - சிறந்த வழியென்று, முயன்றிட்டோம் - ப்ரவர்த்தித்தோம். 35

